[24th March 1958

**Sri N. K. PALANISAMI** : இப்போது விலைவாசிகள் ஏறிக் கொண்டிருப்பதன் காரணமாகவும், ஜனங்கள் அதிகப்படியாக அரிசி சாப்பிடுவதன் காரணமாகவும் இந்த கமிட்டி சொல்லியிருக்கிறது. ஆகவே, இன்றைய தினம் சர்க்கார் பூராவையும் கோதுமையாகக் கொடுப்பதற்கு பதிலாக, பாதி கோதுமையும் பாதி அரிசியும் கொடுக்க ஏற்பாடு செய்வார் களா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அரிசி விலையைக் குறைக்க வேண்டும்என்பது என்னுடைய அபிப்பிராயம், சர்க்காருடைய அபிப்பிராயம். அதற்கு இன்னும் அரிசி உற்பத்தியைப் பெருக்குவதுதான் சிறந்த முறை. இப்போது நியாய விலைக் கடைகளில், ஏப்ரல் மாதம் 1-ம் தேதி முதல், இப்போது இருக்கும் நிலையில் அரிசி விற்பனை அவசியமில்லை என்று கருதுகிறோம். ஆகவே, குறைந்த விலைக்கு வேண்டுமென்கிறவர்கள் கோதுமை வாங்கிக்கொள்ளட்டும் என்று கோதுமை மட்டும் விற்கப் படும்.

**Mr. SPEAKER** : அடுத்த கேள்விக்கு பதிலளிக்க கனம் தொழில் அமைச்சர் அவர்கள் இப்போது இங்கில்லை. ஆகவே, அந்தக் கேள்வி பிற்பாடு எடுத்துக்கொள்ளப்படும்.

### *Gypsies*

* 380 *Q.*—Sri V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether any representation has been received recently from the gypsies in Chengam taluk about their welfare; and

(*b*) if so, the action taken thereon?

The Hon. Sri P. KAKKAN : (*a*) Yes, Sir. A representation has been received from Narikoravars.

(*b*) The matter is under consideration of the Collector of North Arcot.

Sri A. A. RASHEED : What is the population of the gypsies and whether schools have been opened for them?

The Hon. Sri P. KAKKAN : Let the hon. Member put a separate question.

**Sri A. V. P. ASAITHAMBI** : இந்த ஜிப்ஸி ஜாதியார்" பாக்வேர்டு " ஜாதியார் என்று கருதப்படுகிறார்களா அல்லது " பார்வேர்ட் " ஜாதியார் என்று கருதப்படுகிறார்களா ?

**The Hon. Sri P. KAKKAN** : ஜிப்ஸி ஜாதியார் முன்னேற்றம் அடைந்த ஜாதியார் இல்லை. பின் தங்கிய ஜாதியார்தான்.

**Sri V. K. KOTHANDARAMAN** : இந்த ஜிப்ஸி ஜாதியார் ஷெட்யூல்ட் டிரைப்ஸில் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். ஜில்லாக் கலெக்டர் இவர் களுடைய பிரச்னையைத் தீர்த்து வைக்கவில்லை. ஆகவே, உடனடியாக இதற்கு வேண்டிய ஏற்பாடுகளை அரசாங்கம் செய்வார்களா ?

**The Hon. Sri P. KAKKAN** : இந்தக் கேள்வி முதல் கேள்வியி லிருந்து எழவில்லை. அவர்களுக்குக் கொடுத்த இடம் பாரெஸ்டு இடமாக இருந்தது, அவர்கள் வேறு இடம் வேண்டுமென்று கேட்டார்கள். இப் போது திருத்தாண்டிப்படி வில்லேஜில் இடம் கொடுப்பதாக இருக்கிறது. அதைப்பற்றி கலெக்டர் தாசில்தாருக்கு அனுப்பியிருக்கிறார். அது பரி சீலனையில் இருக்கிறது.

24th March 1958]

**SRI S. LAZAR** : இந்த ஜிப்ஸி ஜாதியார் மாகாணம் பூராவும், குறிப்பாக திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் நிறைய இருக்கிறார்கள். இவர்கள் முன்னேறுவதற்கு ஒரே இடத்தில் தங்கி வசிக்க ஏற்பாடுகள் செய்வதற்கு ஒரு பொதுவான திட்டம் அரசாங்கத்திடம் இருக்கிறதா ?

**THE HON. SRI P. KAKKAN** : மாகாணத்தில் உள்ள நரிக்குறவர்கள் எல்லோரையும் ஒரே இடத்தில் வைக்க முடியாது, இருக்கவும் மாட்டார்கள். எங்கெங்கு பாடசாலைகள் வைக்க முடியுமோ, எங்கெங்கு ஹாஸ்டல் நடத்த முடியுமோ அதையெல்லாம் கவனித்து இயன்ற உதவி செய்யப்படும்.

**SRI M. JAGANNATHAN** : நரிக்குறவர்கள், இன்னும் அவர்களைப் போன்ற நாடோடி மக்களை ஒரே இடத்தில் வைத்தால் அவர்கள் வசிக்க மாட்டார்கள் என்று சொன்னார்கள். இவர்களை ஒரே இடத்தில் வசிக்க ஏதாவது சர்க்கார் முயர்ச்சி எடுத்துக்கொண்டார்களா? அந்த முயற்சியில் தோல்வி ஏற்பட்டதா?

**THE HON. SRI P. KAKKAN** : மதுரை ஜில்லாவில் வசிக்க ஏற்பாடு செய்தோம். அவர்களுடைய பையன்கள் படிக்க ஹாஸ்டல் ஏற்பாடு செய்தோம். அவர்களாகச் சில பேர் போய்விட்டார்கள். சில பேரை பெற்றோர்கள் கட்டிக்கொண்டு போய்விடுகிறார்கள். இன்னும் இவர்களைக் கட்டாயப்படுத்தி என்னென்ன வசதி செய்துகொடுக்க முடியுமோ, அவைகளைச் செய்து கொடுக்க அரசாங்கம் முயற்சிக்கும்.

**MR. SPEAKER** : இப்போழுது கனம் தொழில் அமைச்சர் வந்துவிட்டார். 379-ம் கேள்வி எடுத்துக்கொள்ளப்படும்.

*Labour Gazette*

* 379 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN (on behalf of Sri M. Kalyanasundaram) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Government have under consideration any proposal to publish a *Labour Gazette* every month; and

(*b*) if so, when the first issue is likely to be published?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) The proposal is under consideration of the Government.

**SRI V. K. KOTHANDARAMAN** : ஸார், இந்தத் தொழில் கெஜட்டைத் தயார் செய்து வெகு விரைவில் தமிழில் கொண்டுவருவதன் மூலம் தொழிலாளர்களுக்கும் தொழிற் சங்கங்களுக்கும் பெரும் அளவுக்கு உதவியாக இருக்கும். ஆகவே, இதை வெகு விரைவில் கொண்டுவருவதற்கு ஏற்பாடு செய்யப்படுமா?

**THE HON. SRI R. VENKATARAMAN** : இது முதலில் ஆங்கிலத்தில் பிரசுரிக்கப்படும். அதைத் தமிழ்ப்படுத்துவதைப்பற்றி பின்பு யோசனை செய்யப்படும்.

**SRI P. G. MANICKAM** : இந்தத் தொழில் கெஜட் மாகாண ரீதியில் ஏற்படுத்தப்படுமா அல்லது ஜில்லா ரீதியில் ஏற்படுத்தப்படுமா ?

**THE HON. SRI R. VENKATARAMAN** : இது லேபர் கெஜட். மாகாண ரீதியாகப் பப்ளிஷ் செய்யப்படும்.